ஓம்

ஓம் தத்ஸத் பரப் பிரஹ்மணே நம:





# "கந்தோபநிஷத்"

கோவிலூர் மடாலயம் வெளியீடு

ஸ்ரீ சொருபானந்த ஸ்வாமிஜீ அவர்களால்

மொழிபெயர்த்து உரை இயற்றப்பட்டது.

1988

ஓம்

## முன்னுரை

### அருள்மிகு கலாமடம் பாதரக்குடி ஆதீனம்
### ஸ்ரீலஸ்ரீ ரவீந்திரர் என்ற
### காமாட்சி சுந்தர ஞானதேசிக சுவாமிகள்

---

நமது இந்து மதத்தின் மூலநூலும், உலகிலுள்ள இலக்கியங்கள் யாவற்றிலும் தொன்மையானதும், இம்மை – மறுமை – வீடு என்னும் மும்மைப் பயன்களையும் அளிப்பதும், இறைவனின் மூச்சுக் காற்று போன்றதும் ஆகும் வேதம். வேதம், கர்மம், உபாசனை ஞானம், ஆகிய மூன்றையும் தெளிவுபடுத்துகிறது. ஆன்ம ஞானத்தைப் போதிக்கும் பகுதி வேத சாகைகளின் இறுதியில் இருப்பதாலும், வேதத்தின் முடிந்த பொருளாக இருப்பதாலும், அதற்கு வேதாந்தம் என்று பெயர். இவையே உபநிடதங்கள் என்றும் போற்றப்படுகின்றன. உபநிஷத்



என்ற சொல்லில் உப, நி, என்ற உபசர்க்கங்களுடன் கூடிய "சத்" என்ற தாதுவுக்கு அழிப்பது, அடைவிப்பது, முடிப்பது, என்று மூன்று பொருள்கள் உண்டு. அஞ்ஞானத்தை அழிப்பதாலும் பரம்பொருளை அடைவிப்பதாலும் பிறவித் தொல்லையை முடிப்பதாலும் அது உபநிஷத் எனப்படுகிறது.

அத்தகைய உபநிடதங்கள் நூற்றியெட்டு என்று முக்திகோபநிஷத் கூறுகிறது. அதில் அடங்கிய இந்த ஸ்கந்தோபநிஷத் உருவில் மிகச் சிறியதாயினும் அத்வைதத்தை உள்ளங்கை நெல்லிக் கனிபோலத் தெளிவாக விளக்குகிறது. சிவ விஷ்ணு அபேதத்தை சிறப்பாக விளக்குகிறது. இதிலுள்ள தேஹோ தேவாலயக்ப்ரோக்த: என்ற மந்திரம் மிகவும் பிரசித்தமானது. இது சிவபெருமானிடம் தத்துவோபதேசம் பெற்ற முருகப்பெருமான் அவரிடம் தமது அனுபவத்தை எடுத்துக்கூறுவதாக அமைந்துள்ளது.

இந்த நூலை திரு. ஸ்வரூபானந்த சுவாமி அவர்கள் எளிய நடையில் மொழிபெயர்த்திருக்கிறார்கள். சுவாமிகள் அவர்கள் கோவிலூர் பரம்பரையைச் சேர்ந்தவர். நமது நண்பர் தெளிந்த அறிவும் அடக்கமும் ஞான வேட்கையும் உடையவர். அவருடைய ஞானப்பணிகள் சிறப்புற்றோங்க வேண்டுமெனவும், மெய்யன்பர்கள் அனைவரும் இந்நூலை ஓதியுணர்ந்து பேரின்பப் பெருவாழ்வினைப் பெறவேண்டுமெனவும் பரம்பொருளைப் பிரார்த்திக்கின்றோம்.

இடம்: காரைக்குடி
நாள்: 22—9—83

ஸ்ரீ மீனாக்ஷிசுந்தரேஸ்வரர் துணை

# முகவுரை

மலர்தலை உலகில் மக்களாய் பிறத்தலரிது. அதனினும் அறிவிற் சிறந்து ஆன்றோர் ஒழுக்கங்களைப் பின்பற்றல் அரிது. அவ்வாறு விளங்கிய காலத்து அறிவு நூல்களைப் கற்பது அதனினும் அரிதாகும். கற்றபோதினும் அதன்படி நிற்றல் அருளாளர் நெறியாகும். அந்நெறியில் ஒழுகிய ஸ்ரீ அகஸ்தியர், வியாசர், வசிட்டர் போன்ற ரிஷீஸ்வரர்களுள் ஒருவராகிய ஸ்ரீ வியாச பகவானால் வகுத்த நான்கு வேதங்களிலும் சிறந்து சிகையாக விளங்கும் உபநிடதங்களைத் தொகுத்து நூற்றி எட்டாக வைத்திருக்கின்றார். அவற்றில் பத்து உபநிடதங்களுக்கு ஸ்ரீ சங்கரபகவத்பாதபூஜ்ய ஜகத்குரு பாஷ்யம் (உரை) எழுதி இவ்வுலகிற்கு பேருபகாரம் செய்தது, என்றும் அனைவரும் மறக்க முடியாதது ஒன்றாகும். மற்றும் சில பெரியோர்களும் எழுதியுள்ளார்கள்.

அந்த நூற்றி எட்டு உபநிடதங்களில் ஒன்றாகிய ஸ்கந்தோபநிடதத்தில் மூர்த்தி பேதம் வியஷ்டி சமஷ்டி பேதம் நீக்கி சரீரத்தில்

இருக்கும் 'ஆத்மாவே' பிரம்ம சொரூபமென்று தெளிவாகக் கூறி யிருப்பதை அறிந்து அதனை எனது புத்தி அறிந்தமட்டும் மொழி பெயர்த்து உரையுடன் வெளியிட்டிருக்கிறது. இதனைக் கண்ணுறும் பெரியோர்கள் பிழையுளதேல் நீக்கி பெரிதும் உவப்பர்யென நம்புகிறேன். இந்நூலுக்கு உரை எழுதியும், இதனை மொழிபெயர்த்ததும், எந்தையாகிய கந்தனேயன்றி வேறன்று என்பாம்.

இந்நூலுக்கு முன்னுரை அளித்த அருள்மிகு கலாமடம் பாதரக்குடி ஆதீனம் ஸ்ரீலஸ்ரீ ரவீந்திரர் என்ற காமாட்சி சுந்தர ஞானதேசிக சுவாமிகள் அவர்களுக்கு எனது நன்றியை மகிழ்வுடன் தெரிவித்துக் கொள்கிறேன். இந்த நூலோடு காளிதாசன் இயற்றிய பாலா மந்திர தோத்திரத்திற்கும் தொளார், ப. வே. நி. ஸ்ரீ அம்ருதலிங்க சரஸ்வதி சுவாமிகள் கேட்டுக்கொண்டபடி உரை எழுதி சேர்க்கப்பட்டுள்ளது. கோவிலூர் ஆதீனம் மடாதிபதி ஸ்ரீ காசிவிஸ்வநாத ஞானதேசிக சுவாமிகளவர்களால் இந்த இரண்டாவது பதிப்பு நூல் வெளியிடப் படுகிறது இன்னும் கோவிலூர் மடத்தில் மாணவர்களுக்கு உணவும்

உடையும் இலவசமாக கொடுத்து படிக்கவைத்து அறிவுக்கண் திறந்து வைக்கிறார்கள். கண் பார்வை இழந்தோர்களுக்கும் மதுரை அரவிந்த் மருத்துவமனை டாக்டர்களை கொண்டு மடத்தில் கண் சிகிச்சை முகாம் நடத்தி அநேகம் பேர் கண் பெற்றார்கள். மடத்தில் வேதாந்த பாடம் நடைபெற்று வருகிறது. படிக்க விருப்பம் உள்ளவர்கள் வந்து படித்து பயன்பெறலாம் துறவிகளுக்கு மட்டும் உணவு உடை அனைத்தும் இலவசமாக கொடுத்தும் உதவுகின்றார்கள். இந்த நல்ல தருணத்தைப் பயன்படுத்தி கொள்ளவும்.

கோவிலூர் மடம்
19—10—1988

ஸ்ரீ சொருபானந்த சுவாமிகள்

---

எமது அடுத்த வெளியீடு:

அறியாமை நீக்கும் அறிவு விளக்கம் என்னும் நூல்

உ

சிவமயம்

# காளிதாசன் இயற்றிய ஸ்ரீ பாலா மந்திர ஸ்தோத்திரம்

1 சுலோ : ஓம் ஆயி ஆனந்த வல்லி அம்ருதகரதளி ஆதிசக்தி பராயி மாயி மாயுாஸ்வருபி ஸ் ப டி க ம ணி ம யி மாமதங் கிஷடங்கி ஞானி ஞானஸ்வருபி நளினபரமளி நாத ஓங்கார யோகி யோகி யோகாஸனஸ்தே புவனவஸிகரி ஸௌத்ரீம் ஐம் நமஸ்தே

(இ = ள்)

| | | |
|---|---|---|
| ஓம், ஆயி | = | பிரணவ வடிவானவளே, தாயே |
| ஆனந்த வல்லி | = | என்றும் ஆனந்த சொருபியே |
| அம்ருதகரதளி | = | தாமரை இதள் போன்ற கையில் அம்ருதத்தை யேந்தியிருப்பவளே |

| | | |
|---|---|---|
| ஆதிசக்தி, பராயி, மாயி | = | முதல் காரணமாயிருப்பவளே, மேலான தாயே, உலகத்தை மயக்குபவளே |
| மாயாஸ்வரூபி, ஸ்படிக மணிமயி | = | ஒன்பது விதத்திலும் நிரூபிக்க முடியாத மாயையே தனக்கு வடிவமாக உடையவளே, ஸ்படிகம் போன்ற வெண்ணிற முடையவளே |
| மாமதங்கி, ஷடங்கி | = | மாக்ஷிமை பொருந்திய மதங்க முனிவரின் புத்திரியே யாண்டும் மதத்தில் தோய்ந்திருப்பவள்மாதங்கி என்றபடி, வேதத்தின் ஆறு அங்கங்களாய் இருப்பவளே |
| ஞானி, ஞானஸ்வரூபி | = | தன்னை பிரம்மமாக அறிந்தவளே, ஞானமே வடிவானவளே |

| | | |
|---|---|---|
| நளின பரமணி | = | தாமரையை சூழ்ந்த வண்டுகள் போன்ற பக்தர்களால் சூழப்பட்டவளே |
| நாத ஓங்கார யோகி | = | நாத தத்துவமாகிய ஓங்கார மந்திர யோகத்தால் அடையக்கூடியவளே |
| யோகி, யோகாஸனஸ்தே | = | மனத்தைவென்றவளே, சதாகால மும் யோகாஸனத்தில் வீற்றிருப்பவளே |
| புவனவஸிகரி, ஸௌந்தரி | = | உலகத்தை தன்வசமாக வஸீகரித்து வைத்திருப்பவளே, பேரழகு வாய்ந்தவளே |
| ஐம் நமஸ்தே | = | சக்தி தத்துவ பீஜாக்ஷர மந்திரங் களில், ஐம் என்ற சரஸ்வதி பீஜம் ஆன உனக்கு நமஸ்காரம் |

2 சுலோ : ஓம் பாலா மந்த்ரி கடாக்ஷிமம ஹ்ருதயஸகி மத்த பால ப்ரசண்டி வ்யாளியக் ஞோபவீதி விகடகடி ஜடி வீரசக்தி ப்ரஸாதி பாலே பாலேந்துமௌலே மதகஜபுஜி ஹஸ்தாபிக்ஷேத்ரி ஸ்வதந்திரி, காளித்வம் காளரூபி ககளனக்ருதி காரணி க்லீம் நமஸ்தே :

(இ = ள்)

ஓம் பாலா மந்த்ரி காடாக்ஷி = ஓம் என்ற பிரணவத்தோடு பாலா மந்திரத்தை அருளியவளே

மம ஹ்ருதயஸகி = என்னுடைய இருதயத்தில் மயில் போலிருப்பவளே

மத்த பாலப் டிரசண்டி = உன் மத்தரைப் போலும், பாலர்களைப் போலும் தன்னிஷ்டப்படி, வேகமாகவும் மிருதுவாகவும் சஞ்சரிப்பவளே.

| | | |
|---|---|---|
| வ்யாளியக் ஞோபவீதி | = | பாம்பை பூணூலாக அணிந்தவளே |
| விகடகடி ஜடி | = | அழகான வளைந்த இடைவரை நீண்ட ஜடையை உடையவளே |
| வீரசக்தி, ப்ரஸாதி | = | வீரமான சக்தி உடையவளே அருள்புரிபவளே |
| பாலே, பாலேந்து மௌலே | = | ஒன்பது வயது நிரம்பியவளே, இளஞ்சந்திரனை முடியில் அணிந்தவளே |
| மதகஜபுஜி ஹஸ்தாபி | = | மதங்கொண்ட யானைக் கூட்டங் |
| க்ஷேத்ரி, ஸ்வதந்திரி | = | களின் துதிக்கையால் அபிஷேகம் செய்யப்பட்டவளே, சுதந்திரமாய் இருப்பவளே |

| | | |
|---|---|---|
| காளித்வம் காளரூபி ககளாக்ருதி | = | கருநிறமான மேகக் கூட்டங்களைப் போன்ற திருமேனியுடையவளே ஆகாச முதலிய பஞ்சபூதங்களை யுண்டாக்கி (கக என்னும் அட்சரத்தை வடிவாக உடையவளே) |
| காரணி | = | ஆதிமூலமாய் இருப்பவளே |
| க்லீம் நமஸ்தே | = | காமபீஜமான க்லீம் என்ற இரண்டாவது பீஜ மந்திரமாயிருப்பவளே உனக்கு வணக்கம். |

3 சுலோ : ஓம் மூலாதார மஹிம்னே குதஹ்ற நயனே மூலமந்திரே த்ரிணேத்ரே ஹாரகேயூரவல்லி அகில சுபகரி அம்பிகாயி சிவாயி வேதி வேதாந்த ரூபி விஜயகனதடி வீரதந்த்ரி பவாணி சாரிசம் சாரயோனி சகல குணமயி இத்யேத் ஸ்ரீம் ஸௌம் நமஸ்தே :

(இதன் பொருள்)

| | | |
|---|---|---|
| ஓம் மூலாதார மஹிம்னே | = | மூலாதாரத்தின் மகிமையை உடையவளே |
| குதவஹ நயனே | = | குதம் என்னும் மூலாதாரத்தில் உன் முகப்பார்வை உடையவளே |
| மூலமந்த்ரே, த்ரிணேத்ரே | = | பாலா மூலமந்திரத்திற்கு காரண மானவளே, முக்கண் உடையவளே |
| ஹாரகேயூர வல்லி | = | நவரத்ன ஆபரணங்களும் புஜ ஆபரணங்களும் அணிந்தவளே |
| அகில சுபகரி | = | எல்லா சுபங்களையும் கொடுப்பவளே |
| அம்பிகாயி | = | பார்வதி தாயே |
| சிவாயி | = | மங்களத்தை அருள்புரியபவளே |

| | | |
|---|---|---|
| வேதி | = | வேத சொரூபியே |
| வேதாந்த ரூபீ | = | உபநிஷத் வடிவமாயிருப்பவளே |
| விஜயகனதடி | = | வெற்றிகளில் கரை கண்டவளே |
| வீரதந்த்ரி | = | வீரஜைமினையங்களையுடையவளே |
| பவாணி | = | பவன் என்னும் பெயர் பெற்ற பரம சிவன் பத்னியே |
| சரரிசம் சாரயோனி | = | அடிக்கடி பிறவிக்குக்காரணமாயிருப்பவளே |
| சகலகுணமயி | = | சகலமும் அறியும் குணமயமாயிருப்பவளே |
| இத்யேத் | = | மேற்கூறிய குணங்களையுடையவளே |
| ஸ்ரீம் ஸௌம் நமஸ்தே | = | ஸ்ரீ := லக்ஷ்மிபீஜமான உனக்கு வணக்கம். |

4 சுலோ: ஓம் ஐம் க்லீம் ஸௌம் சர்வதந்திரி மமவரசுககரி அங்கணு கீர்த்திதாயி

ஶ்ரீம்: ஹ்ரீம் க்லீம் பீஜமுக்யையர் தினகரகிரணேர் ஜ்யோதி ரூமே சிவாக்யே

ஹ்ராம் ஹ்ரீம் ஹ்ரும் ஹேமவர்ணேர் ஹிமகரகிரணேர் பாசமானேந்துசூடே

க்ஷாம் க்ஷீம் க்ஷீம் க்ஷௌமவர்சே சகலஜயகரி சக்திபாலே நமஸ்தே:

(இதன் பொருள்)

ஓம் ஐம் க்லீம் = சரஸ்வதி பீஜம், (அனைத்தையும் படைப்பவளே) காமராஜ பீஜம் (பக்தர்கள் வேண்டியதை கொடுப்பவளே)

ஸௌம் = சௌபாக்கிய பீஜம் (சகல செல்வமும் தருபவளே)

| | | |
|---|---|---|
| சர்வதந்திரி | = | எல்லாவற்றையும் தன்வயப்படுத்தியவளே |
| மமவர சுககரி | = | எனக்கு, சிறந்த இன்பத்தை அளிப்பவளே |
| அங்கனு கீர்த்திதாயி | = | பெண்களையும் புகழையும் அளிப்பவ்ளே |
| ஸ்ரீம், ஹ்ரீம் | = | லக்ஷ்மி பீஜம், புவனேஸ்வரி பீஜம் (மாயா பீஜம்) |
| க்லீம், பீஜமுக்யைர் | = | காமராஜ பீஜம், சிறந்த பீஜட்சரங்களாகிய |
| தினகரகிரணைர் | = | சூரிய கிரணங்களால் |
| ஜோதிருமே, சிவாக்யே | = | ஒளிவடிவானவளே, மங்களகரமான பெய்ரை உடையவளே |
| ஹ்ராம், ஹ்ரீம் | = | அக்னி பீஜம், மாயா பீஜம் |
| ஹ்ரூம், ஆதியஹேமவர்ணைர் | = | வாயு பீஜம், பொன்னிறமான |

| | | |
|---|---|---|
| ஹிமகரகிரணேர் | = | சந்திர கிரணங்களால் |
| பாசமானேந்து சூடே | = | ஒளிரும் நிலவைத் தலையில் சூடியிருப்பவளே |
| க்ஷாம் | = | பிருதி பீஜம் மண்ணின் கூறு |
| க்ஷீம் | = | ஜல பீஜம் தண்ணீரின் கூறு |
| க்ஷூம் | = | ஆகாய பீஜம் வெளியின் கூறுகளுக்கு காரணமாயிருப்பவளே |
| க்ஷெளமவாஸே | = | பட்டாடை அணிந்தவளே |
| சகலஜயகரி | = | எல்லா வெற்றியையும் அளிப்பவளே |
| சக்தி பாலே | = | சிறுமியாகிய ஒன்பது வயது நிரம்பிய பரா சக்தியே |
| தே | = | உனக்கு |
| நம: | = | வணக்கம் |

1 சுலோ: அச்யுதோ அஸ்மி மகாதேவ தவகாருண்ய லே சதக விஜ்ஞான கன ஏவாஸ்மி சிவோஸ்மி கிமதக பரம்:

(இதன் பொருள்)

| | | |
|---|---|---|
| அச்யுதோ அஸ்மி | = | எனது இயற்கையான வடிவிலிருந்து நீங்காமலிருக்கிறேன் |
| மகாதேவ | = | மேலான தேவரீர் |
| தவகாருண்ய லே சதக | = | தங்களுடைய சிறிது கருணையால் |
| விஜ்ஞான கன ஏவாஸ்மி | = | அறிவுமய ஆத்மாவாக இருக்கிறேன் |
| ஸிவோ ஸ்மி கிமதக பரம் | = | சிவமாகவேயிருக்கிறேன் இதற்கு மேல் என்ன வேண்டுவது |

2 சுலோ: நநிஜம் நிஜவத் பாத் அந்த: கரண ஜ்ரும் பணுத் அந்த: கரண நாஸேன ஸம்வின் மாத்ர ஸ்திதோ ஹரி:

(இதன் பொருள்)

| | | |
|---|---|---|
| நநிஜம் நிஜவத் பாத் | = | நிஜம் அல்லாதது நிஜம் போல |
| அந்த: கரண ஜ்ரும் பணுத் | = | மனதில் தோறுகிறது |

அந்த: கரண நாஸேன் = மன மற்ற நிலையில்
ஸம்வின் மாத்ர = ஞானமயமான விஷ்ணுவே
ஸ்திதோஹரி நிலைத்திருக்கிறார்

3 சுலோ: ஸம் வின்மாத்ர ஸ்திதச்சா அகம் ஆஜோ அஸ்மி கிமத: பரம் வ்யதிரிக்தம் ஜடம் ஸர்வம் ஸ்வப்பன வச்சுவின ஸ்யதி

(இதன் பதப்பொருள்)

ஸம்வின் மாத்ர ஸ்திதச்சா = சச்சிதானந்த ஆன்மாவாய் நிலைத்து
அகம் அஜோ அஸ்மி = நான் பிறப்பற்று இருக்கிறேன்
கிமத: பரம் = இதற்கு மேல் இனி என்னவேண்டுவது
வ்யதிரிக்தம் = எல்லாம் வேறாகவும்
ஜடம் = அறியாத ஜடவஸ்துவாயும்
ஸர்வம் ஸ்வப்பன வச்ச = சொப்பனம்போல் எல்லாம் தோன்றி
வினஸ்யதி = மறையக்கூடியது

4 சுலோ: சித் ஜடானும் துயோ த்ருஷ்டாஸோ அஸ்மி ஞானவிக்ரஹ: ஸ, ஏவஹி மகாதேவ: ஸ, ஏவஹி மகாஹரி:

(இதன் பதப்பொருள்)

| | | |
|---|---|---|
| சித் ஜடாணும் துயோ | = | திருசியமாகிய சேதன சேதனங்களை |
| த்ருஷ்டாஸோ | = | அறிகின்ற அறிவாகிய |
| ஞான விக்ரஹ: | = | ஞான வடிவமாக |
| அஸ்மி | = | இருக்கின்ற |
| ஸ, ஏவஹி மகாதேவ: | = | அவரே எல்லாம் மேலான தேவனுவர் |
| ஸ, ஏவஹி மகாஹரி: | = | அவரே மஹாவிஷ்ணுவான ஹரியாகவும் இருக்கிருர். |

5 சுலோ: ஸஏவ ஜ்யோதிஷாம் ஜ்யோதி: ஸஏவ பரமேஸ்வர:
ஸஏவஹி பரப்ரஹ்ம தத்ப்ரஹ்ஞா அகம் நஸம் சய:

(இதன் பதப்பொருள்)

| | | |
|---|---|---|
| ஸஏவ ஜ்யோதிஷாம் ஜ்யோதி | = | எது அறிகின்ற அறிவுக்கெல்லாம் மேலான சுயஞ் ஜோதியோ |
| ஸஏவ பரமேஸ்வர | = | அவனே ஒளிகளுக்கெல்லாம் ஒளியானவன் மேலான தலைவன் |
| ஸஏவஹி பரப்ரஹ்ம | = | அந்த ஈஸ்ரனே பரப்பிரஹ்மம் |

| | | |
|---|---|---|
| தத்ப்ரஹ்ஞர் அகம் | = | அந்த அறிவாகிய பிரம்மமே நானாகயிருக்கிறேன் |
| நஸம் சய: | = | இல்தி சந்தேகமில்லே |

6 சுலோ: ஜீவ: ஸிவ: ஸிவோஜீவ: ஸஜீவ: கேவல ஸிவ:
துஷேண பத் தோ வ்ரீஹி: ஸ்யாத் துஷா பாவேன் தண்டுல:

(இதன் பொருள்)

| | | |
|---|---|---|
| ஜீவ: ஸிவ: | = | ஜீவாத்மாவே சிவனாகிய பரமாத்மா வாகிறான் |
| ஸிவோஜீவ: | = | சர்வக்ஞவடிவ சிவனே மூன்று தேகங்களுக்கும் உள் ஜீவனாக விளங்குகிறான் |
| ஸஜீவ: கேவலஸிவ: | = | அந்த ஜீவனே தனித்த ஒப்பற்று விளங்கும் சிவனாக இருக்கிறான் |
| துஷேண பத்தோ வ்ரீஹி | = | உமியோடு கூடியிருப்பதால் முளைக்கும் ஏதுவாகிய நெல்லாகஇருக்கிறது |
| ஸ்யாத்துஷா பாவேன | = | பொருந்திய உமியை நீக்கிப் பார்க்குமிடத்து |

தண்டுல = அரிசியாக இருக்கிறது அதுபோல பரம் பொருள் ஜடசம்பந்தம் பெறும் போது ஜீவனுகவும் அது இல்லாத போது கேவல சிவனாகவும் இருக்கிறது

7 சுலோ : ஏவம் பத்தஸ் தாத ஜீவ: கர்ம நாஸே ஸதாஸிவ:
பாஸ பத்தஸ் ததாஜீவ : பாசமுக்த: சதாசிவ:

(இ = ள்)

ஏவம் பத்தஸ்ததா = இவ்வாறு கர்மபந்தத்தில் கட்டுண்ட அதனால்

ஜீவ: = அவன் ஜீவனென்று சொல்லப்படுகிறான் ஆசையாகிய

கர்மநஸே = கர்மபந்தம் நீங்கிய விடத்து

ஸதா ஸிவ: = ஒளி வடிவ சிவனுக இருக்கிறுன்

பாஸ பத்த ஸ்ததா ஜீவ: = தேகாதிகளில் பற்று உள்ளவரை ஜீவன்

| | | |
|---|---|---|
| பாச முக்த: | = | பந்தங்களினின்றும் விடுபட்டவன் |
| சதாசிவ: | = | எப்பொழுதும் உள்ள சிவனாகவே இருக்கிறான் |

8 சுலோ: ஸிவாய விஷ்ணு ரூபாய ஸிவ ரூபாய விஷ்ணவே
ஸிவஸ்ய ஹ்ருதயம் விஷ்ணுர் விஷ்ணோச்ச ஹ்ருதயம் ஸிவ:

(இ = ள்)

| | | |
|---|---|---|
| ஸிவாய விஷ்ணு ரூபாய | = | விஷ்ணு வடிவமான சிவனுக்கு வணக்கம் |
| ஸிவரூபாய விஷ்ணவே | = | சிவ வடிவான விஷ்ணுவுக்கு வணக்கம் |
| ஸிவஸ்ய ஹ்ருதயம் விஷ்ணுர் | = | சிவனுடைய இருதயமே விஷ்ணுவும் |
| விஷ்ணோச்சு ஹ்ருதயம் ஸிவ: | = | விஷ்ணுவினுடைய இருதயமே சிவன் |

9 சுலோ: யதா ஸிவமயோ விஷ்ணு ஏவம் விஷ்ணுமய: ஸிவ:
யதாந்தரம் நபஸ்யாமி ததாமே ஸ்வஸ்திராயுஷு:

(இ—ள்)

| | | |
|---|---|---|
| யதாஸிவமயோ விஷ்ணு | = | சிவனுக்கு வேறாகாமல் சிவமயமாக விஷ்ணு விளங்குகிறார் |
| ஏவம் விஷ்ணுமய: ஸிவ: | = | விஷ்ணுவுக்கு வேறல்லாமல் விஷ்ணு மயமாகவே சிவன் விளங்குகிருர் |
| யதாந்தரம் | = | மேற்கூறிய சிவ விஷ்ணுவாகிய இவருக்குள் எந்தவித பேதமும் |
| நபஸ்யாமி | = | நாம் பார்த்ததில்லை |
| ததாமே ஸ்வஸ்திராயுஷ: | = | அவர்களிடம் பேதமின்மையை அறிந்த தனுல் மாசுநீங்கி பெரிதும்உய்ந்தேன் |

10 சுலோ : யதாந்தரம் நபேதா ஸ்யு: ஸிவகேஸவ யோஸ்ததா தேஹோ தேவாலய: ப்ரோக்த: ஸஜீவ: கேவல—சிவ:

(இதன் பொருள்)

| | | |
|---|---|---|
| யதாந்தரம் நபேதா | = | எப்படி பேதமின்றி ஒன்ருக |
| ஸ்யு: ஸிவகேஸவயோஸ் | = | சிவனும் விஷ்ணுவும் இருக்கின்ருர்களோ |

| | | |
|---|---|---|
| ததா | = | அப்படியே என்று, மிருந்து விளங்கட்டும் |
| தேஹோ தேவாலய | = | இந்த தேகமே கோவில் என்று சொல்லப்பட்டது |
| ப்ரோக்த: ஸிஜீவ: | = | இந்த தேகத்தோடு கூடிய அறிவு மயமான ஜீவனே |
| கேவல சிவ: | = | தனித்த ஒப்பற்ற மங்களகரமான சிவனாக விளங்கிக் கொண்டிருக்கின்ருன் |

11 சுலோ : த்யஜே தஜ்ஞான நிர்மால்யம் ஸோ அகம் பாவேனபூஜயேத்
அபேத தர்சனம் ஜ்ஞானம் த்யானம் நிர்விஷயம் ம ந:

(இ = ள்)

| | | |
|---|---|---|
| த்யஜே தஜ்ஞான | = | விட்டு விடு, அஞ்ஞானம் |
| நிர்மால்யம் | = | என்னும் நிர்மால்யத்தை (சேஷமாகிய பழயதை) |

| | | |
|---|---|---|
| ஸோ அகம்பாவேன பூஜயேத் | = | சிவமே நான் என்னும் பாவனையி ஞல் - பூஜை செய்பிரம்மமே நான் என பூஜிப்பாயாக ஒன்ருக காண்பது ஞானம், |
| த்யானம் நிர்விஷயம் மந: | = | தியானத்திற்குக் காரணம் ஒருவிஷய மும் மநதில் பற்றாதிருப்பதுவே |

12 சுலோ : ஸ்நானம் மனோமலத்யாக: சௌசம் இந்த்ரிய நிக்ரஹ:
ப்ரஹ்மாம்ருதம் பிபேத் பைக்ஷம் ஆசரேத் தேக ரக்ஷணே:

(இ—ள்)

| | | |
|---|---|---|
| ஸ்நானம் மனோ மலத்யாக: | = | குளிப்பது என்பது மனதிலிருக்கும் ஆசை முதலியவற்றை சுத்தமாக விடுவதுதான் |
| சௌசம் இந்த்ரிய நிக்ரஹ: | = | சுத்தம் என்பது மெய், வாய், கண், மூக்கு, செவி என்னும் இவற்றை தடுத்து நிறுத்துவதே |

| | | |
|---|---|---|
| பிரம்மாம்ருக்ஷும் பிபேத் | = | மன்தை (துரிய) உச்சிக்கு நேர் நிறுத்தி இன்பத்தை அடையவும் |
| பைக்ஷம் ஆசரேத் | = | பிக்ஷை ஏற்றுக்கொள்க |
| தேக ரக்ஷணே | = | தேகத்தை காக்கும் பொருட்டு |

13 சுலோ : வஸேத் ஏகாந்திகோ பூத்வா ஏகாந்தே த்வைத வர்ஜிதே
இத்யேவம் ஆஸரேத் தீமாந் ஏவம் முக்தி மாப்நுயாத்

(இ = ன்)

| | | |
|---|---|---|
| வஸேத் ஏகாந்திகோ பூத்வா | = | எப்பொழுதும் ஏகாந்தமான தனியிடத்தில் இருக்க வேண்டும் |
| ஏகாந்தே த்வைத வர்ஜிதே | = | தனித்து இருக்குமிடத்தில் தனது ஆன்ம சொருபத்திற்கு வேருக இல்லை என்று இருக்க வேண்டும் |
| இத்யேவம் ஆஸ்ரேத் | = | இதை எவன் பின்பற்றி அப்பியசிக்கிருனே |
| தீமான் | = | அந்தப் புத்திமாளுகிய ம்முக்ஷுவானவன் |

ஏவம் முக்தி = பிறவாநெறியாகிய பேரின்பம் (விடுதலை)

மாப் நுயாத் = அடைகிருன் இதனை சுருதியும் துவிதம் பயத்திற்கு ஏது என கூறுப

14 சுலோ: ஸ்ரீ பரம் தாம்நே ஸ்வஸ்தி சிராயுஷ் யோந் நம: இதிவிரிஞ்சி நாராயண சங்கராத்மகம் ந்ருஸிம்ஹ தேவேச தவப்ரஸாதத:

(இதன் பொருள்)

ஸ்ரீ பரம் தாம்நே ஸ்வஸ்தி ராயுஷ் = மீண்டும் திரும்பி வராத இடமான அதற்கு வணக்கம். நாம் பரிசுத்த தன்மை அடைந்து ஆயுள் விருத்தி பெறுவோம்

யோந் நம: இதிவிரிஞ்சி, நாராயண = பிரணவ வடிவத்தை வணங்குவோம் பிரம விஷ்ணு

சங்கராத் மகம் = சிவனென்ற மூவுருவும் ஒருருவாய் அமைந்த

நரஸிம்ஹ, தேவேச = நரசிம்ம தேவன் என்ற நாமத்தோடு விளங்கும் தேவ தேவனே,

தவப்ரஸாத த: தங்களுடைய வரப்பிரசாதத்திஞல் பெற்றது.

15 சுலோ: அஸிந்த்யம் அவ்யக்தம் அனந்தம் அவ்யயம் வேதாத்மகம் பிரஹ்ம நிஜம் விஜானதே தத்விஷ்ணோ: பரமம் பதம் ஸதா பஸ்யந்தி ஸூரய: திவீவ சக்ஷுராததம்

(இ = ள்)

அஸிந்த்யம் = இவ்வண்ணமென்று சிந்திக்க முடியாததும்

அவ்யக்தம் = வெளிப்படக் காணமுடியாததும்

அனந்தம் = முடிவில்லாததும்

அவ்யயம் = நாசமில்லாததும்

வேதாத்மகம் பிரஹ்ம நிஜம் விஜானதே = இருக்காதிவேதப்பொருளாயிருக்கும் பிரம்ம சொருபமான

| | | |
|---|---|---|
| தத் விஷ்ணோ: பரமம் பதம் ஸதாபஸ்யந்தி | = | உண்மை உணர்வான அந்த எங்கும் நிறைந்த மேலான (பரமபதம்) தத்துவத்தை எப்பொழுதும் காண் கிறார்கள் |
| ஸூரய: திவீவ | = | இந்திரிய ஜெயமுடைய வீரர்கள் மேலான மனக்கண் (ஞானக்கண்) |
| சக்ஷுராததம் | = | பெற்றவர்கள் ஆகியவர்கள் |

16 சுலோ: தத்து விப்ராஸோ விபன்யவோ ஜாக்ருவாம்ஸ: ஸமிந்ததே விஷ்ணோர் யத்பரமம் பதம் இத்யேதந் நிர்வாண, அநுசாசனம், இதிவேதாநு ஸாசநம் இதிவேதாநு சாசனம் இத்யுபநிஷத்:

(இ = ள்)

| | | |
|---|---|---|
| தத்து விப்ராஸோ | = | அந்த பிரம்மத்தைஅறிந்த பிராமணர் |
| விபன்யவோ | = | களே (ஞானவான்களே) விவேகமாகியு |
| ஜாக்ருவாம்ஸ: | = | ஞான விழி (கண்) பெற்றமேலானோர் |
| ஸமிந்ததே | = | களே நன்கு ஒளிரச்செய்கிறது |

| | | |
|---|---|---|
| விஷ்ணோர் யத்பரமம் | = | விஷ்ணுவினுடைய அந்தமேலான பரம |
| பதம் இத்யே தந் | = | பதமே சிறந்தது இதுவே குற்றமற்ற |
| நிர்வாண அநுசாசனம் | = | மோக்ஷவிதி பற்று இது வேதத்தின் |
| இதிவே தாநு சாசனம் | = | ஆக்ஞை ஆகும் இது வேதத்தின் |
| இதிவே தாநு சாசனம் | = | ஆக்ஞை ஆகும் |
| இத்யுப நிஷத் | = | இந்த உபநிஷத் வேதவிதி |



ஸ்ந்தோபநிஷத் முற்றிற்று

கந்தனே வந்து ஜனவினிற் புகன்றிட வதனே
இந்தநான் மொழி பெயர்த்திட எனதுளே வந்து
இந்தநே ருண ஒ இலங்கிடச் செய்தது மன்றி
முந்தையோர் மொழி ஜதிக்குமே இதுவென மொழிந்தான்.



